**பிரேத மனிதன்**

நாவல்

மேரி ஷெல்லி

தமிழில்: புதுமைப்பித்தன்

தமிழில் முதல் பதிப்பு: டிசம்பர், 1943

Kindle Edition: March, 2021

**Predha Manithan (Frankenstein)**

Novel

Mary Shelley

Tamil translation: Pudhumaipithan

Tamil First Edition: December, 1943

Kindle Edition: March, 2021

Wrapper Art: Theodor Von Holst

# உள்ளடக்கம்

# முன்னுரை

இதென்ன, பிரேதத்தைக் கூட்டித் தைத்து உயிர் தருவதாவது என்று பலர் நினைக்கலாம். மனிதனுடைய மூலவம்சம் பற்றியும், ஜீவ பரிணாம நியதியைப் பற்றியும் ஆராய்ச்சி நடத்திய சார்லஸ் டார்வின், ஹக்ஸ்லி முதலிய பண்டிதர்கள், வருங்காலத்தில் சாத்தியம் என நினைத்த ஒரு கருத்தை, அதாவது சிருஷ்டி ரகசியம் நம் வசம் கிடைத்துவிடும் என்பதை ஒட்டியே இந்தக் கதை ஜோடிக்கப்பட்டிருக்கிறது. இங்கிலீஷ் பாஷையில் இந்தக் கருத்தையொட்டிப் பல நாவல்கள் வெளிவந்துள்ளன. எச். ஜி. வெல்ஸ் எழுதிய ஐலண்ட் ஆப் டெரர் [பீதித் தீவு] என்ற நாவலிலும் ஒரு பண்டிதர் மிருகங்களை ரண சிகிச்சை மூலம் மனிதனாக்க முயலுவதாகக் கதை ஒன்று உண்டு.

இங்கிலீஷ் பாஷையிலே நன்மை தீமை என்ற இரண்டு சக்திகளை மோதவிட்டு அதன் விளைவுகளைப் பார்க்கும் கதைகள் பல உண்டு. டாக்டர் பாஸ்டஸ், டாக்டர் ஜெக்கில் அண்ட் மிஸ்டர் ஹைட், ஐலண்ட் ஆப் டெரர், இன்விஸிபிள் மான் [சூட்சும சரீரி] முதலிய நாவல்களைப் போலத்தான் பிராங்கன்ஸ்டீன் என்ற இந்தப் பிரேத மனிதனும். பிராங்கன்ஸ்டீன் சிருஷ்டித்த பிரேத மனிதன் அவனைக் கேட்கும் கேள்விகள், மனிதன் தெய்வத்தைப் பார்த்துப் போடும் கேள்விகளாகவே கொள்ள வேண்டும்.

இதை எழுதியவர் மேரி ஷெல்லி. இங்கிலீஷ் பாஷையில் பிரபல கவியான ஷெல்லியின் மனைவி. பிறந்தது 1797. ஷெல்லி இவளை இரண்டாவது தாரமாகக் கலியாணம் செய்துகொண்டார். கலியாணமாகுமுன்பே இவள் பல கதைகள் எழுதியதுண்டு. இவளது தந்தையும் பிரபலஸ்தர். அவர் பெயர் கூட்வின். அந்தக் காலத்திலே இலக்கிய மறுமலர்ச்சிக்குத் துணை செய்த 'கூட்வின் சர்க்கிள்' என்ற இலக்கிய சங்கம் ஒன்று உண்டு. மேரி ஷெல்லியின் கற்பனை பூரண வடிவம் பெற்றது கலியாணத்துக்குப் பிறகுதானாம்.

இந்த பயங்கரமானதொரு கற்பனை ஒரு பெண்ணுக்கு எப்படித் தோற்றியது?

மேரி ஷெல்லியே இதை விவரிக்கிறார்.

“1812 வேனிலில் நாங்கள் ஸ்விட்ஸர்லாந்தில் குடியேறினோம்.

எங்கள் அருகே லார்ட் பைரன் குடியிருந்தார். [லார்ட் பைரன் ஆங்கிலக் கவி.] அவர் அப்போது 'சைல்ட் ஹேரால்ட்' என்ற காவியத்தை எழுதிவந்தார். ஜெனிவாவில் அப்போது மழையும் தூரலுமாகயிருந்துகொண்டிருந்தது. பிரெஞ்சு பாஷையில் மொழிபெயர்க்கப்பட்ட ஜெர்மன் பேய்க் கதை ஒன்றைப் படித்துப் பொழுதைப் போக்கிக்கொண்டிருந்தோம். இதைப் படிக்கும்போது நாங்கள் அதே மாதிரி பேய்க்கதை ஆளுக்கொன்று எழுதுவது என்று தீர்மானித்தோம். ஷெல்லி எழுதியது, 'மாஜெப்பா' என்ற காவியத்தின் கடைசியில் பதிப்பிக்கப்பட்டது. என் பங்குக்கு, நானோ தினம் தினம் 'கதை எதுவும் தோன்றவில்லை' என்று சொல்லிவந்தேன். அவர் எழுதியதைப் போலவே பயங்கரமான சிருஷ்டி ஒன்றாக இருக்க வேண்டும் என்று விரும்பினேன்.

பைரனும் ஷெல்லியும் பேசிக்கொண்டிருக்கும்போதெல்லாம் அருகில் உட்கார்ந்து நான் கேட்டுக்கொண்டிருப்பேன். அவர்கள் இருவரும் டாக்டர் டார்வின் பரிசோதனைகளைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பார்கள். அந்த டாக்டர் ஸேமியாவை ஒரு கண்ணாடிப்பெட்டியில் போட்டு அடைத்து ஏதோ ஒரு முறையால் அது உயிர் பெற்றுப் புழுவாக நெளியும் வரை வைத்திருந்தார் என்று சொல்லிக்கொள்ளுவார்கள். நான் இதை வைத்துக்கொண்டுதான் பிரேதத்துக்கு உயிர் கொடுக்க முடியும் என்று கற்பனை செய்தேன்.

அன்று தூங்க முயன்ற பொழுது என்னால் தூங்க முடியவில்லை. பேய்க் கனவுகள் பல அல்லல்படுத்தின. யாரோ ஒருவர் ஒரு பிரம்மாண்டமான மனித பிண்டத்தை யந்திரத்தின் மீது ஏற்றி உயிர் கொடுக்கும் மாதிரி கண்டேன். எவ்வளவு பயங்கரமானது! சிருஷ்டித்த கடவுளையே கேலி செய்ததாக அல்லவா இருக்கும்? அந்தப் பேய்ச் சடலம் எழுந்து நிற்கிறது. பிரேதக் களையோடு விழிக்கிறது...

நான் பயந்துகொண்டு விழித்தேன். இதுதான் என் கதை போலும்!

மறுநாள், "எனக்குக் கதை வந்துவிட்டது" என்றேன்.

'நவம்பர் மாதத்தில் பயங்கரமானதொரு நள்ளிரவில்...' என்று கதையை ஆரம்பித்தேன். நான் அதைச் சிறுகதையாகவே எழுத நினைத்தேன். ஷெல்லியின் யோசனை பிரகாரம்

உருவெடுத்ததுதான் இந்த நாவல்.''

இந்த நாவலைப் பற்றி எழுதிய முன்னுரையில் சார்லஸ் டார்வின், இன்னும் சில ஜெர்மன் சித்தாந்திகள் ஆகியோரின் கருத்தே இக்கதைக்குக் கரு என்கிறார் ஸ்ரீமதி ஷெல்லி. இலியாது, ஷேக்ஸ்பியரின் நடுவேனிற் கனவு, மில்டனுடைய சுவர்க்க நீக்கம் ஆகியவற்றின் போக்கில் அமைந்தது இக்கதை என்று அவர் கூறுகிறார். இந்தக் கதை ஜெனிவாவில் வைத்து எழுதப்பட்டது.

என்னுடைய தமிழ் நகல் அப்பட்டமான மொழிபெயர்ப்பல்ல. கதையின் போக்கை மட்டும் அனுசரித்துக்கொண்டு கோவை தகர்ந்துவிடாமல் எழுதப்பட்டது.

நம் நாட்டில் உள்ள நல்லரவான் கதை, யமனைத் தேடி சுரகுருவுக்காகத் தூதுபோன கதை முதலியனவும் இம்மாதிரி வார்ப்பை அனுசரித்தவையேயாகும். கதையின் பெயர் விசேடங்கள் சிலரை மிரட்டலாம். ஆனால் கதைச்சத்து நம் பாவனைக்குப் பொருந்தியதேயாகும். "பேயணையை முறித்திட்டு, பிணமெத்தை ஐந்தடுக்கி நிலாத் திகழும் பஞ்ச சயனத்தின்'' மேல் அமர்ந்த காளியைவிடவா இது கோரமானது?

**புதுமைப்பித்தன்**

15-12-43

# இதில் வருவோர்

**அல்பான்ஸ் பிராங்கன்ஸ்டீன்:** ஜெனிவா பிரபலஸ்தர். விக்டரின் தந்தை.

**விக்டர் பிராங்கன்ஸ்டீன்:** இரண்டாவது பிரம்மா

**கிளெர்வெல்:** இரண்டாவது பிரம்மாவின் பள்ளிக்கூட நண்பன்

**வில்லியம், எர்னஸ்ட்:** சகோதரர்கள்

**எலிஸபெத் லாவென்ஸா:** விக்டருக்கு நிச்சயம் செய்த காதலி

**டி'லெஸி:** குருட்டுக் கிழவன்

**பெலிக்ஸ், அகேதா:** அவனுடைய மக்கள்

**ஸாதீ:** அரபுக் காதலி

**கார்வின்:** ஐரிஷ் மாஜிஸ்டிரேட்

**கிரம்ப் வால்ட்மென்:** இங்கோல்ஸ்டாட் சர்வகலாசாலைப் பண்டிதர்கள்

# பிரேத மனிதன்

## ஆரம்பம்

*[வால்டன் என்பவர் தமது சகோதரி ஸ்ரீமதி ஸாவிலுக்கு எழுதிய கடிதங்கள். அதில் அவர் தமது உத்தர பிராந்திய யாத்திரையில் கண்ட அதிசயங்களை இங்கிலாந்திலிருக்கும் தமது சகோதரிக்கு எழுதுவதாகப் பாவனை.]*

எங்கள் கப்பல் உறைபனியில் மாட்டிக்கொண்டது. சுற்றிலும் மூடுபனி. பகல் இரண்டு மணிக்கு அது கலைந்து வெளிச்சம் வந்தது. என்னுடன் வந்தவர்கள் மனம் நொடிந்து போனார்கள். அச்சமயம் ஓர் அதிசயமான காட்சி தென்பட்டது. தூரத்திலே பனிவண்டி பூட்டி எவனோ ஒருவன் வட துருவத்தை நோக்கி விரைவாகச் சென்றான். நாய்கள் வண்டியை இழுத்துச் சென்றன. கணத்தில் வண்டியும் மனிதனும் மறைந்துவிட்டனர்.

மறுநாள் காலை கப்பலின் மேல்தட்டில் ஏதோ களேபரம். யாரோ ஒருவனுடன் மாலுமிகள் பேசிக்கொண்டிருந்தார்கள். பனி உருகிவிட்டதினால் வண்டி தண்ணீரில் சிக்கிக்கொண்டு மிதந்தது. ஒரே ஒரு நாய் மட்டுமே உயிரோடிருந்தது.

நான் சென்றதும், தன் சங்கடத்தையும் ஆபத்தையும் உணராமல், ‘‘எங்கே போகிறீர்கள்?’’ என்று கேட்டான். ‘‘உத்தர துருவத்துக்கு’’ என்றேன். இந்த பதில் அவனுக்குத் திருப்தி அளித்தது. "என்னையும் ஏற்றிக்கொள்ளுங்கள்’’ என்றான்.

அவனைக் கப்பலுக்குள் ஏற்றிக் கம்பளி போட்டுப் போர்த்தி சிச்ருஷை செய்தோம்.

குணமடையச் சில நாட்கள் சென்றன.

‘‘உங்கள் அனுதாபத்துக்கும் பராமரிப்புக்கும் என் நன்றி. ஆனால் அதனால் பயனில்லை. நான் ஒரு காரியத்தை எதிர்பார்க்கிறேன். அது நடந்துவிட்டால் நிம்மதியுடன் என் உயிர் பிரியும். என் வரலாற்றைக் கேளுங்கள். அன்னியன் அப்பொழுது நான் சொல்லுவது புரியும்’’ என்றான்.

# அன்னியன் சொன்ன கதை

நான் ஜெனிவாக்காரன்; பிறந்தது அந்த ஊரில்தான். அங்கே செயலாக உள்ள புராதனக் குடும்பம் என்னுடையதுதான். ஜெனிவாக் குடியாட்சி மகாசபைகளிலே என் மூதாதைகள் சொற்சக்தி படைத்து வந்ததுடன் தலைமை ஏற்று நடத்தியும் வந்திருக்கிறார்கள். என் தகப்பனாரும் வெகு காலத்துக்குப் பிறகுதான், அவர் மூப்பு மேலிடும் தருணத்தில்தான், கலியாணம் செய்துகொண்டார்; நான் அப்போது பிறந்தேன்.

அவர் கலியாணம் செய்துகொண்டதே ஒரு தினுசு. அது அவருடைய குணத்துக்குச் சிறந்த உதாரணம். அவருடைய நண்பர்களிலே போவர்ட் என்று ஒரு வியாபாரி. அதிர்ஷ்டம் என்ற சகடக்கால் கீழ்மண்டிப் பாய, செயலும் சிறப்புமாக இருந்த ஊரில் இருப்புக்கொள்ளாமல், முடிந்தவரை வார்த்தைக்குப் பழுதில்லாமல், கொடுக்கல் வாங்கல்களைத் தீர்த்துக்கொண்டு லூபெர்ஸ் என்ற ஊரில் போய்க் குடியேறினான். அங்கே தன் வறுமையும் துன்பமுமாக உருக்குலைந்து, நாளைக் கழித்து வந்தான். என் தந்தைக்கு போவர்டிடம் பரமநட்பு. அவனுடைய வீண் கௌரவத்தால் ஏற்பட்ட விபரீதத்தைக் கண்டு மிகவும் நொந்தார். அவனைத் தேடிப்பிடித்துக் கொண்டுவந்து மீண்டும் பழையபடி செயலில் வைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டுப் புறப்பட்டார். கடைசியாகக் கண்டுபிடித்தார். செயலில் இருந்தவன் நொடிந்துபோனால் வேறு நோய் வேண்டுமா? அதுவே அவனைக் கிடத்திவிட்டது. மகள் பராமரிப்பில் படுத்த படுக்கையாக ஜீவனைத் தாங்கிவந்தான். என் தந்தை அங்கு சென்றபோது போவர்ட்டின் ஆவி அகன்றுவிட்டது. மகள் அகதியாகி அழுதுகொண்டு கிடந்தாள். ஈமக் கிரியைகளை முறைப்படி நடத்திவிட்டு, நேசனுடைய மகளை, அதாவது கரோலைன் போவர்டை அழைத்துக்கொண்டு ஊருக்குத் திரும்பினார். இரண்டு வருஷங்கள் கழித்து அவளைக் கலியாணம் செய்துகொண்டார். அவர்களிருவருக்கிடையிலும் வயது வித்தியாசம் ஜாஸ்தி. இருந்தாலும் சந்தர்ப்பம் அவர்களது பாசத்தைப் பிணித்தது. ஆனால், இளமையிலேயே இவ்வளவு அல்லல்களையும் பட்ட எனது தாயாரின் தேகம் பொள்ளலுற்றது. அவளுக்கு உடம்பில் வலுவுண்டாக்க தகப்பனார் அவளை தேச யாத்திரை அழைத்துச் சென்றார். இத்தாலியிலிருந்து ஜெர்மனிக்குப் போனார்கள்; அங்கிருந்து பிரான்ஸுக்கு வந்தார்கள். நான் நேப்பிள்ஸில் பிறந்தேன். நான்தான் முதல் குழந்தை. அதன் பிறகு பல வருஷங்கள் வரை குழந்தை பிறக்கவில்லை. என் தாயார் பெண் குழந்தை வேண்டும் என்று

ஆசைப்பட்டாள்.

எனக்குச் சுமார் ஐந்து வயசு இருக்கும்; அப்பொழுது நாங்கள் இத்தாலிக்கு அப்பால் உள்ள கோமோ ஏரி அருகே சுகவாசத்துக்காகச் சென்றிருந்தபொழுது, என் தாயார், ஏழ்மையில் அல்லாடிவரும் ஒரு குடும்பத்திலிருந்து ஒரு சிறுமியைத் தத்து எடுத்தாள். அக்குழந்தையின் அழகும் குணமும் ஒத்திருந்தன. அவள் பெயர் எலிஸபெத் லாவென்ஸா. அவளைப் பார்த்தவர்கள் நெஞ்சில் பாசம் சுரக்கும். அவள் வந்து எங்களில் ஒருவளாக வாழ்ந்துவரலானாள்.

சிறுவயதில் நாங்கள் இருவருமே இணை பிரியாது ஓடியாடித் திரிந்து வருவோம். எங்கள் குணம் ஒத்துப்போகிறது. அவளுக்குக் காவியத்திலே ஆசை. ஸ்விட்ஸர்லாந்தின் பனி கவ்விய மலை வளத்தில் அவள் மனசைப் பறிகொடுத்தாள். அவள் மனசு அழகில் ஈடுபட்டது; நானோ காரண காரிய ரீதியில் எல்லாவற்றையும் துருவித்துருவிப் பார்ப்பதில் புத்தியைச் செலவிட்டேன்.

எனக்கு ஒரு தம்பி பிறந்தது எங்கள் பெற்றோருக்குக் கால்கட்டு என்று சொல்ல வேண்டும். அவன் பிறந்ததுடன், இந்த தேசாந்திர யாத்திரை நின்றுபோயிற்று. ஊரோடு வந்து அங்கேயே நிலையாக இருந்தார்கள். என் தம்பிக்கும் எனக்கும் வயசில் ஏழு வருஷங்கள் வித்தியாசம்.

ஜெனிவாவில் ஒரு வீடு உண்டு. பெல்ரிவ் ஏரியின் கீழ்க்கரையில் உத்தியாபவனம் என்று ஒன்று உண்டு. எனக்கு ஜன சந்தடியே பிடிக்காது. பொதுவாக என் பள்ளிச் சகாக்களுடன் சேர்ந்து கும்மாளம் போடும் குணம் எனக்குக் கிடையாது. அவர்களைக் கண்டாலே ஒரு அசிரத்தை. அவர்களில் ஒருவன்தான் என் மனசைக் கவ்வினான். அவன் ஜெனிவாவில் ஒரு வர்த்தகர் மகன். அவன் பெயர் ஹென்றி கிளெர்வெல். முயற்சி, உழைப்பு, ஆபத்து இவற்றை நாடும் மனம் படைத்தவன். வீரபரம்பரைச் சரித்திரங்களிலே ஆழ்ந்த பாண்டித்தியம் உண்டு. மனுஷ வர்க்கத்தில் எங்களைப் போல அதிர்ஷ்டம் இளமைப் போதிலே யாருக்கும் கிடைத்திருக்க மாட்டாது. அவ்வளவு மனோகரமாகக் கழிந்தது என்னுடைய இளமைக் காலம்.

இயற்கையின் ரகசியங்களைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற ஆசையை விதிதான் என் மனசில் விதைத்தது என்று சொல்ல வேண்டும். எனக்குப் பதின்மூன்று வயசிருக்கும். தோனான் அருகே குளிப்புரை ஒன்று உண்டு. அங்கு நான் சிலரோடு சென்றிருந்தேன். வெளியில் பருவம் சீராக இல்லை. ஒரு விடுதியில் நாளைக் கழிக்க வேண்டியதாயிற்று. அங்கே சில

புஸ்தகங்கள் கிடந்தன. அதில் ஒன்று [1] கார்னீலியஸ் அக்ரிப்பா எழுதிய கிரந்தம். அதைப் படித்துப் பரவசமானேன். புதுப்புது விஷயங்கள் என் மனசில் உதயமாயின. நான் படித்ததை என் தகப்பனாரிடம் சொன்னேன். ''கார்னீலியஸ் அக்ரிப்பாவா? விக்டர், வீணாக, அந்த அபத்தக் குப்பையைப் படித்து காலத்தை விரயம் பண்ணாதே'' என்றார்.

இப்படி ஆசையாக நான் சொல்ல வந்ததை அபத்தம் என்று உதாசீனம் செய்யாமல் அக்ரிப்பாவின் சித்தாந்தங்கள் என்ன, அவை எப்படி உடைபட்டுப்போயின; நவீன சாஸ்திரம் எப்படி எல்லாம் வளர்ந்து ஓங்கிவிட்டது என்பதையெல்லாம் எனக்கு எடுத்து விளக்கியிருந்தால் நான் அதைத் தூக்கிப் போட்டுவிட்டிருப்பேன். ஆனால் அவரது உதாசீனம் என் ஊக்கத்தைத்தான் அதிகமாக வளர்த்தது. செய்யாதே என்பதைச் செய்து பார்ப்பதுதானே சிறுபோதில் யாருக்கும் இருக்கக்கூடிய ஆசை. நான் வீட்டுக்குத் திரும்பியதும், இந்த மாதிரி கிரந்தகாரர்களின் எழுத்துக்கள் எல்லாவற்றையும் சேகரித்தேன். [2] பார்ஸல்ஸஸ், அல்பர்டஸ் மாக்னஸ் என்பவர்களுடைய ஆராய்ச்சிகளையும் வாங்கி வைத்துப் பார்த்தேன். எனக்கு இயற்கையின் நுட்பங்களை அறிவதில் மகாமோகம். நவீன சாஸ்திரிகளின் ஆராய்ச்சிகளை எவ்வளவுதான் நான் விரும்பி விரும்பிப் படித்தாலும், முடிவில் மனத்திருப்தி இல்லாமல்தான் திரும்பினேன்.

''சத்த சாகரத்தின் ஓரத்திலே, கூழாங்கற்களைப் பொறுக்கிக்கொண்டிருக்கும் குழந்தை மாதிரிதான் நான்'' என்று சர் ஐஸக் நியூட்டன் சொன்னாராம். நூதன சாஸ்திர பண்டிதர்கள் ஒவ்வொருவருமே இம்மாதிரிக் கூழாங்கல் பொறுக்கிகள்தான் என்று நான் நினைத்தேன்.

உள்நுட்பம் தெரிந்த பண்டிதர்கள், நிபுணர்கள் ஆகியோர் புராதன காலத்தில் ஆழ்ந்த ஞானம் படைத்துத்தான் இருந்தார்கள். நான் அவர்களுடைய சீடன். 18வது நூற்றாண்டிலே இது ரொம்பவும் விகற்பமாகப் படலாம். ஜெனிவாவில் கிடைக்கும் கல்வி வசதியை நான் பெற்றேன் என்றாலும், உண்மையில் அறிவு விருத்தியெல்லாம் என் மட்டில் சொந்த சம்பாத்தியமே. எங்கப்பாவுக்கு சாஸ்திர ஆராய்ச்சி கிடையாது. குருட்டுக் குழந்தை மாதிரி அறிவுப் பசியைத் தீர்க்க நான் சொந்தமாக என் போக்கில் மல்லாடத்தான் முடிந்தது. நான் குரு முகமாக பெற்ற உபதேசம் சித்தாந்த மாளிகையையும் ஜீவரசத்தையும் தேடித் திரியும்படியே என்னை அலைக்கழித்தது. முடிவில் ஜீவரச நாட்டம் என் முழு மனசையும் உழைப்பையும் கவ்வியது. செல்வம் என்ன அற்பமான வஸ்து. உடல் கூட்டிலிருந்து நோய்நொடியை ஓட்டி, மனிதனை நித்தியமாக வாழத் தெம்பு படைக்கும்படி செய்துவிட்டால் அது எப்படிப்பட்ட மகத்தான சேவையாகும்!

என் கனவுகள் இம்மட்டோடு நிற்கவில்லை. பூதபைசாசங்களை அழைப்பது எப்படி என்பதையும் எனது கிரந்தகர்த்தர்கள் எனக்குக் கற்பித்தார்கள். அதையும் சாதிக்க ஆசைப்பட்டேன். என்னுடைய உபாசனைகள், மந்திரோச்சாடனங்கள் கைகூடி வரவில்லையென்றால் எனது அனுபவமின்மைதான் காரணம் என்று நினைத்துக்கொள்ளுவேன். கணநேரமாவது என்னுடைய கிரந்த-குருமார்களை நான் சந்தேகித்தது கிடையாது. இப்படியாக, என் மனசும் புத்தியும் நொடிந்த, உடைந்த, உருக்குலைந்த சாஸ்திரங்களில் முக்குளித்து எழுந்தன.

எனக்குப் பதினைந்து வயசு. பெல்ரிவ் வீட்டுக்குக் குடிபோயிருந்தோம். அப்பொழுது ஊழியின் இறுதிக் காலம் போல ஒரு சண்டமாருதம் அடித்தது. ஜூரோ மலைச் சிகரங்களின் சரிவிலிருந்து புறப்பட்டது புயல். இடி வானத்தின் நாலா திசைகளிலுமிருந்தும் குமுறியது. நான் இந்தக் கோர நாடகத்தை ஆச்சரியத்துடனும் மனசு எக்களிப்போடும் பார்த்துவந்தேன். அப்படி நான் பார்த்துக்கொண்டிருக்கும்போது என் வீட்டுக்கு எதிரே சற்று தூரத்தில் நின்ற நெடுங்கால விருக்ஷம் ஒன்றிலிருந்து நெருப்புக் கொப்புளித்துக்கொண்டு வருவதைக் கண்டேன். கண்ணைப் பறித்த அந்த ஒளி மங்கியதும் எதிரில் நின்ற மரத்தைக் காணவில்லை. வெறும் முண்டு ஒன்றுதான் நின்றது. மறுநாள் அதன் அருகில் சென்று பார்த்த பொழுது, இடியின் அதிர்ச்சியால் பிளந்துவிடாமல், நார்நாராகக் கிழிபட்டு அடியோடு நாசமானதைக் கண்டேன். இதைப் போல சர்வநாசமான எதையும் நான் எப்போதும் கண்டதே கிடையாது.

மின்சாரத்தைப் பற்றி ஏற்கனவே யாவருமறிந்த நியதிகள் கூட எனக்கு இதுவரை தெரியாது. இடி விழுந்து நாசமானதைப் பார்க்க வந்த கூட்டத்தில் இருந்த நிபுணர் ஒருவர் அதை எல்லாம் விளக்கினார். அவருடைய வார்த்தைகள் அக்ரிப்பாவையும், அல்பர்டஸ் மாக்னஸையும், பார்ஸல்ஸையும் என் மனக்கோளத்தைவிட்டுச் சற்று ஒதுக்கின. ஆனால் விதி வலிது. சிறிது காலத்தில் மீண்டும் அவர்கள் என் மனப்பீடத்தில் ஆட்சி புரிந்தார்கள்.

எனக்குப் பதினேழு வயசாயிற்று. என் தகப்பனார் என்னை இங்கோல்ஸ்டாட் சர்வகலாசாலையில் சேர்த்துவிடுவது என்று தீர்மானம் பண்ணினார். நான் புறப்படும் தேதிகூட நிர்ணயமாகிவிட்டது. அப்போது என் ஜீவியத்தின் மீது கவியப் போகும் அந்தகாரத்தின் உற்பாதம் போல ஒரு விபரீத நிகழ்ச்சி என் யாத்திரைக்குக் குறுக்கே விழுந்தது.

எலிஸபெத்துக்கு விஷஜுரம் கண்டது. நோய் அவளைக் கடுமையாக வாட்டியது. என் தாயார் இரவு பகல் ஓயாமல், அகலாமல் இருந்து சிச்ருஷை செய்தாள். நோய் அவளைவிட்டு அகன்றது. ஆனால் என்

தாயைப் பற்றிக்கொண்டது. சாகும்போது நானும் எலிஸபெத்தும் கலியாணம் செய்துகொண்டு என் தம்பிமாரைப் பராமரித்தால், தள்ளாத வயதில் என் தகப்பனாருக்கு ஆறுதலாக இருக்கும் என்று சொல்லிவிட்டு உயிர் நீத்தாள். சாகும்போது அமைதியாய் ஆவி பிரிந்தது. ஈமக்கிரியைகளை நடத்திவிட்டு நான் இங்கோல்ஸ்டாட் போய்ச் சேர்ந்தேன்.

ஊர் சேர்ந்த மறுநாள் அறிமுகக் கடிதங்களைக் கொடுத்துப் பிரதான பண்டிதர்களை அறிமுகம் செய்துகொள்ள அவர்களை நாடினேன். அப்பொழுதும் என்னை நசுக்கத் திட்டம் போட்ட விதி, இயற்கைத் தத்துவ சாஸ்திர பண்டிதரான கிரெம்பிடம் முதலில் என்னை அழைத்துச் சென்றது என்று நினைக்கிறேன். அவர் பார்ப்பதற்குக் குரூபி. ஆனால் அவரது அறிவில் இயற்கையின் நுட்பங்கள் அனைத்தும் மடங்கிக் கிடந்தன. அவர் என்னுடைய ஞானத்தைப் பரிசோதனை செய்தார். நான் படித்த கிரந்தகர்த்தர்களான ரசவாதிகளின் பெயர்களை விவரித்தேன். "இந்த அபத்தங்களை எல்லாம் படித்துக்கொண்டிருப்பதிலா உன் நாளையும் பொழுதையும் கழித்துக்கொண்டிருந்தாய்?" என்று கேட்டார்.

நான் "ஆமாம்" என்றேன். "நீ இதுவரை செலவு செய்த ஒவ்வொரு நிமிஷமும் வீண். நசித்துப்போன தத்துவங்களைத்தான் நீ உன் புத்தியில் இதுவரை சுமடு ஏற்றிவந்திருக்கிறாய். இதுகூடத் தெரியாமல் தெய்வமே நீ எந்தப் பாலைவனத்தில் அப்பா குடியிருந்தாய்! இந்தக் கட்டுக்கதைகள் யாவும் கவைக்கு உதவாது என்று எடுத்துச் சொல்ல உனக்கு ஒரு ஆளும் இல்லாமல் போச்சா? இந்தக் காலத்தில் அல்பர்டஸ் மாக்னஸ், பார்ஸல்ஸஸ் ஆகியோருடைய சீடர்கள் எவரையும் பார்க்க முடியும் என்று நான் நம்பியதே கிடையாது. இனிமேல் நீ புதிதாகத்தான் உன் படிப்பை முதலிலிருந்து ஆரம்பிக்க வேண்டும்" என்று சொல்லிவிட்டு நான் படிக்கவேண்டிய புத்தக ஜாபிதா ஒன்று எழுதிக் கொடுத்தார். தான் இயற்கை சாஸ்திரத்தை அடுத்த வாரத்திலிருந்து போதிக்கத் தொடங்க உத்தேசித்திருப்பதாகவும், அவரது சகாவான வால்ட்மன் பண்டிதர் ரசாயனம் கற்பிப்பார் என்றும் சொன்னார்.

நான் வீடு திரும்பினேன். கிரெம்பின் போக்கு எனக்குப் பிடிக்கவில்லை. ரசவாதத்தை விட்டுத்தொலைக்க வேண்டும் என்பது முன்பே ஆசைதான். ஆனால் நவீன சாஸ்திர பண்டிதர்களின் ஆராய்ச்சிகளும் எனக்கு அற்பமாகவே பட்டன. ரசவாதம் வெறுங் கனவுதான். ஆனால் வியர்த்தமான பெருங் கனவுகள் இல்லையா! நித்தியத்துவம், சக்தி முதலியன போன்ற அற்பமான உண்மைகளைக் கொடுத்து இந்தப் பெருங் கனவுகளை வாங்க விரும்பினேன். இங்கோல்ஸ்டாட்டுக்கு வந்து இரண்டு மூன்று நாட்கள் வரை இந்த நினைப்புத்தான்.

வால்ட்மன் பண்டிதர் எப்படி இருக்கிறார் என்பதையும் பார்த்துவிடுவோம் என்று புறப்பட்டேன். வால்ட்மன் தம்முடைய சகாவுக்கு முற்றிலும் நேர்மாறானவர். வயசு ஐம்பதிருக்கும். மனசிலே அன்பு, தயை, கபாலத்திலே ஒன்றிரண்டு நரைகள், நிமிர்ந்த நடை. இவைதான் வால்ட்மன். ரசாயன சாஸ்திரம் வளர்ந்ததைப் படிப்படியாக வர்ணித்தார். பிறகு சாஸ்திரத்தின் தற்கால நிலையைப் பருந்தோட்டமாக எடுத்துச் சொன்னார். சாஸ்திர பரிபாஷையை விளக்கினார். தற்கால ரசாயனம் எந்த நிலையில் இருக்கிறது என்பதை அவர் உபன்னியசித்தது என்றும் என் மனத்தைவிட்டு அகலாது.

"புராதனர்கள் சொன்னது பெரிது; சாதித்தது ஒன்றுமில்லை. ஆனால் நவீன விற்பன்னர்கள் பேச்சைப் பிரமாதப்படுத்தவில்லை. ஓர் உலோகத்தை வேறொன்றாக மாற்ற முடியாது என்பது அவர்களுக்குத் தெரியும். ஜீவரசம் என்பது கானல் நீர் என்பதை அவர்கள் அறிவார்கள். அவர்கள் துளைவதெல்லாம் அழுக்கில்தான்; ஆனால் அபார உண்மைகளைக் கண்டுவிட்டார்கள். வரம்பற்ற சக்தி அவர்கள் வசமாகிவிட்டது. அவர்களுக்கு வானத்து இடியைத் தருவிக்க முடியும்; பூகம்பத்தைப் பிடித்து பொம்மலாட்டம் காட்டுவார்கள். கட்புலனுக்கு வசப்படாத லோகத்தைக்கூட ஆட்டிவிடுவார்கள்'' என்றார்.

என் மனசோ புதுவழியை வகுத்து சிருஷ்டியின் ஆழ்ந்த ரகசியங்களை நாடவேண்டும் என்று சங்கல்பித்தது. அன்றிரவு என் மனம் ஒரே கொந்தளிப்பில் குமைந்தது. மறுநாள் வால்ட்மன் பண்டிதரை நாடினேன். என் ஆசையைச் சொன்னேன்; வாலிபத்தின் உற்சாகத்துடன் சொன்னேன். நான் எதைப் படிக்கவேண்டுமென்று விநயமாகக் கேட்டேன்.

‘‘நீயே எனது உண்மைச் சீடன்; உறுதியைப் போல உழைப்பும் இருந்தால் வெற்றி காணுவாய்'' என்று ஆசீர்வதித்துத் தமது ஆராய்ச்சி மண்டபத்துக்கு என்னை அழைத்துச் சென்று கருவிகளைப் புழங்கும் முறையைப் பழக்கிக் கொடுத்தார்.

# முயற்சி

இரண்டு வருஷங்கள் இங்கோல்ஸ்டாட்டில் இவ்வாறு கழிந்தன. நான் கல்வியை ஒருவித வெறியுடன் தொடர்ந்தேன். அக்காலத்தில் நான் ஊருக்குப் போகவும் இல்லை; கடிதங்கூட எழுதவில்லை.

இந்த இரண்டு வருஷங்களிலும் என் மனசு சில ரகசியங்களை ஆராய்ந்து அவற்றை நாடித் தொடர்ந்தது. இந்த சாஸ்திர ஆராய்ச்சி இருக்கிறதே, இது மோகினிப் பிசாசு மாதிரி. பற்றிக்கொண்டால் விடாது. இந்த இரண்டு வருஷ ஆராய்ச்சி ரசாயனக் கருவிகள் சிலவற்றில் அபிவிருத்தியைச் சாதிக்கத்தான் எனக்கு வகை செய்தது. இது எனக்குப் புகழ் சம்பாதித்துத் தந்தது எனக்கே ஆச்சரியமாக இருந்தது. நான் இதைச் சாதித்த பொழுது என் படிப்பு பூர்த்தியாகிவிட்டது என்று நினைத்தேன். எனது மனம் நாடும் ஆராய்ச்சிக்கு உகந்த இடம் அது அல்ல. சொந்த ஊருக்கே திரும்பிவிடலாம் என்று தீர்மானித்தேன். ஆனால் ஒரு சம்பவம் எனது தாமசத்தை நீடித்தது.

இயற்கைத் தோற்றங்களில் மனித உடற்கூறு என் கவனத்தைக் கவர்ந்தது. ஜீவனுடன் நடமாடும் ஒவ்வொரு பிராணியையும் கவனித்தேன். அதை நடமாடச் செய்யும் சக்தி எது? இதுவே என் மனத்தில் எழுந்த கேள்வி. ஜீவ தத்துவம் என்ன? இது தெம்புமிக்க கேள்வி. இது புரிந்துகொள்ள முடியாத ஒரு மூடுமந்திரம் என்றுதான் கருதப்பட்டு வந்தது. உடல்கூறு நுட்பங்களைப் பற்றிய சாஸ்திரங்களைக் கற்க ஆரம்பித்தேன். உண்மை நாட்டம் பெரும் வெற்றியாக மாறுபட்டிராவிட்டால் இந்த வேலைகள் யாவும் எனக்கே பெறும் சுமையாக மாறி இருக்கும் என்பதில் ஐயமில்லை. நான் உடல்கூறு நூலைக் கற்றுத் தெளிந்தேன். அது மட்டும் போதவில்லை. மனுஷ உடம்பு இயற்கையாக அழுகி அழிவதையும் கூர்ந்து கவனிக்க வேண்டியிருந்தது. எனது கல்வியில் பிரதான போதனை பயமின்மை. இதை இளமையிலேயே படியவைத்ததற்கு என் தகப்பனாருக்குத்தான் நான் நன்றி செலுத்த வேண்டும். பேய் பிசாசு என்ற பயம் சற்றுமில்லாமல் சமாதிக் குழிகளிலும் கல்லறைகளிலும் படிப்படியாக தேகம் எப்படி அழிகிறது என்பதை நேரில் கவனிப்பதற்காக நடமாடித் திரிந்தேன். மனிதனுடைய உடம்பு செத்து விழுந்ததும் எவ்வளவு மகாகேவலப்பட்ட வஸ்துவாகிவிடுகிறது. ரத்தம் துளும்பிய ஜீவன் ஓட்டம் ஒடுங்கியதும் உடம்பு அழுக ஆரம்பிக்கிறது. கண்ணையும் மூளையையும் கிருமிகள்

ஆட்கொள்ள ஆரம்பிக்கின்றன. ஜீவ களையிலிருந்து ஜீவனற்ற நிலை ஏற்படுவதற்குத் துணையாக உள்ள காரணங்களை எல்லாம் வெகு நுணுக்கமாகப் பரிசோதனை செய்துவந்தேன். உயிர், பிறகு உயிரின்மை. அதே மாதிரிதான் மரணம், அதிலிருந்து உயிர். அதாவது மரணம் சம்பவிப்பதற்குத் துணையாக நின்ற காரண சக்திகளைப் போக்கினால் உயிர்நிலை மீண்டும் நேராதா? திடீரென்று இந்த ஞானம் உதயமாயிற்று. முன்போ பின்போ ஜீவ களை இல்லாத ஒரு வஸ்துவில் உயிரைப் பெய்து பார்க்காமல், செத்ததை சாவின் குணங்களைப் போக்கி மீண்டும் உயிர்ப்பிக்கலாம் அல்லவா? முடியும் என்று தோன்றியது.

நான் சொல்லுவது வெறியனுடைய மனசின் ஓட்டசாட்டங்கள் அல்ல. முயற்சி பலனளித்தது. ஜீவ ரகசியம் என் கைக்கு வசப்பட்டது. கடைசியாக ஜீவ களையின் அந்தரங்கத்தையும் வாழ்வின் நுட்பத்தையும் கண்டுபிடித்துவிட்டேன். இது மட்டுமா? ஜட வஸ்துவில் உயிரைப் பெய்து அதை இயக்கிவைக்கும் சக்தியும் என் வசமாயிற்று.

இந்த தேவ ரகசியத்தை வைத்துக்கொண்டு நான் பிரமித்துப் போனேன். என்ன செய்வது, அதை எந்த வகையில் உபயோகிப்பது? தயங்கினேன். நான் எதற்கு உயிர் கொடுத்துப் பார்ப்பது? அதற்குத் தக்க உடல்கூறு செய்யும் வகை என்ன? இது மகா கஷ்டமான சாதனை. நம் உடம்பில் காணும் ஒவ்வொரு தசை நாரையும் நாளத்தையும் நரம்பையும் எப்படிச் செய்து இணைப்பது. அதில் விழுந்து வேலை செய்தேன். மிருக ராசிக்கு உயிர் கொடுத்துப் பார்க்க என் மனம் ஒப்பவில்லை. மனிதனையே சிருஷ்டித்துப் பார்க்க வேண்டும் என்று என் மனம் தவித்தது. முயன்று முயன்று பல தோல்விகளைக் கண்டேன். சிறுசிறு நாளங்களையும் நரம்பு வகைகளையும் செய்வது மகா கஷ்டமாக இருந்ததினால், பிரம்மாண்டமான ஒரு மனிதச் சடலத்தை அமைக்க முற்பட்டேன். எட்டடி உயரம், அதற்கேற்ற அங்கங்கள், உடல்கூறு அமைப்புகள். பல நாட்கள் பாகங்களைத் தேடித் திரிந்து சேமித்தேன்.

புயலின் கொந்தளிப்போடு நான் உழைத்தேன். மரணமும் ஜீவனும் ஒரு எல்லைக்கோட்டுக்குள் வசமாயின. நான்தான் இருள் மண்டிய லோகத்திலே ஜீவ களை என்ற சூரியோதயத்தை உண்டுபண்ணுகிறவன். நான் சிருஷ்டிக்கும் இந்த வம்சம் என்னைத் தந்தையிலும் மேலாக பாவிக்கும். செத்தழுகிய உடலிலிருந்து மரணத்தைப் போக்கி அதற்கு உயிர் கொடுக்கும் வகையை நான் கண்டுபிடிப்பேன்.

இந்த மாதிரி ஆவேசத்தில் உழைத்துவந்தால், எந்த மாதிரி வைரம் பாய்ந்த உடலும் நரம்பும்தான் தாங்கும்? நினைக்க எனக்கே உடம்பு

நடுநடுங்குகிறது.

தனித்த ஒரு வீடு. அதில் நான் உழைக்கும் அறை மாடிப்படி தாண்டி ஒரு மூலையில் இருந்தது. பிரேதக் குழிகளிலிருந்தும் ஆஸ்பத்திரி பிணமறுக்கும் கிடங்குகளிலிருந்தும் கசாப்புக் கடைகளிலிருந்தும் எனக்குத் தேவையான அங்கங்கள் வந்தன. இவற்றைக் கொண்டு இரவு பகல் ஓயாது உழைத்து, ஓர் உடல்கூட்டைக் கட்டி முடித்தேன். இதற்குள் புறஉலகிலும் மாறிமாறிப் பருவங்கள் ஒன்றையொன்று தொடர்ந்தன. நான் யாருக்கும் எழுதாமல் கொள்ளாமல் இந்த முயற்சியில் ஈடுபட்டிருந்ததினால் என் தகப்பனாரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. "உன்னிடமிருந்து ஒழுங்காகக் கடிதம் வராமலிருப்பது உன்னுடைய இதர கடமைகளிலும் அப்படித்தான் இருந்து வருகிறாய் என்பதற்குப் போதுமான அத்தாட்சி."

தகப்பனாருக்கு எனது நாட்டம் புரியுமா? இருந்தாலும் எனது வேட்கை என்னை விழுங்கியது. அவர் என்னைப் பிசகாக நினைத்ததில் என்ன அதிசயம்? இருந்தாலும் ஒரு விதத்தில் நான் குற்றவாளிதான். மனிதன் என்றால் நிதானம் வேண்டும். உணர்ச்சி வசப்பட்டு அதற்குள் ஆழ்ந்துவிடலாகாது. அறிவுத் தேட்டமும் இந்த நியதிக்குள் அடங்கியதுதான். இருந்தாலும் நான் சட்டை செய்யவில்லை.

இலையுதிர் காலமும் வந்தது. எனது வேலையும் ஏறக்குறைய முடிந்தது. இந்த மாதிரி ஆவேசத்தில் வேலை செய்த எனக்கு நாடியில் அதிர்ச்சி கண்டுவிட்டது. சிறு சத்தம்கூட என்னைத் திடுக்கிட வைக்கும். உடம்பிலே சிறிது ஜுர வேகம் ஏறி அடித்தது. நானும் தேய்ந்து வந்தேன். உடம்பு பொள்ளலாயிற்று. வேலையை முடித்துக்கொண்டு ஓய்வும் நிம்மதியும் பெற்று மறுபடியும் திடம் பெறலாம் என்று நினைத்தேன். எனக்கேது ஓய்வு?

# பிரேத மனிதன்

நவம்பர் மாதம். நடுராத்திரி என் வேலை முடிந்தது. நான் செய்துவைத்த உடல்கூட்டைப் பார்த்தேன். மன உளைச்சல் என்று கூறும்படியான கவலையுடன் அதற்கு உயிர் பெய்யும் கருவிகளைத் திரட்டி எடுத்தேன். உயிரற்ற சடலம் என் காலடியில் கிடந்தது. மங்கிய வெளிச்சத்தில் அந்தச் சடலத்தின் கண்கள் திறந்தன. அது மூச்சுவிட்டது. அது கால், கைகளை ஆட்டியது.

நான் செய்து வைத்த மனித ராசியை எப்படி விவரிப்பது. அவனது அங்கங்கள் லக்ஷணத்துக்குப் பொருந்தி இருந்தன. முகம் அழகாக இருக்க வேண்டும் என்று விரும்பினேன். அழகா? அட தெய்வமே! அழகா அது? மஞ்சள் பூத்த சர்மம். உள்ளடக்கிய நாளங்களைச் சற்றே மறைத்தது கருத்த சிகை. முத்துப் போன்ற பல் வரிசை. ஆனால் யாவும் ஒன்று சேர்ந்து மகா கோரமாகத்தானிருந்தது. கண்விழி தேக்கமற்றுத் தெளிவற்று விகாரமாக இருந்தது. உதடுகள் நீலம் பாரித்துக் கிடந்தன.

மனித குணத்தைப் போல மனிதனுடைய இதர அமைப்புக்களை லேசில் மாற்ற முடியாது. இந்த இரண்டு வருஷங்களாக இந்த உடல்கூட்டில் உயிர் பெய்ய என் வலுவை அழித்துக்கொண்டேன். ஆசை நிறைவேறியதும் நான் செய்து வைத்த உடல்கூடு எனக்கே வெறுப்பைத் தந்தது; என் மனசைக் குமட்டியது. உயிர் பெய்த அந்தச் சடலத்தைக் காணச் சகியாமல் நான் ஓடி வந்தேன். படுக்கையில் விழுந்தேன். மனசின் கொந்தளிப்பு அடங்கும் என்று கண்களை மூடித் தூங்க முயன்றேன். தூங்கும்போது ஒரு சொப்பனம். இங்கோல்ஸ்டாட் தெருவிலே எலிஸபெத்தைக் கண்ட மாதிரி. ஓடிப்போய் அவளைத் தழுவி முத்தமிட்டேன். என் கைக்குள் சிக்கியது என் தாயாரின் சவம். அவளது சவத்தை மூடியிருந்த துணிமீது புழுக்கள் நெளிந்தன. கூக்குரலிட்டு விழித்தேன். மங்கிய நிலவொளியில் நான் செய்து வைத்த பிரேத சடலம் ஜன்னல் வழியாக உள்ளறைக்குள் புகுவதைக் கண்டேன். நான் செய்து வைத்த ஜீவராசி என்னுடைய கட்டில் திரையை நீக்கிக்கொண்டு என்னை நோக்கியது. அந்தப் பார்வை – கண்கள் என்றா சொல்வது அதை? அந்த உறுப்பைக் கொண்டு என்னையே விழித்து நோக்கியது. பேச முயன்றது. ஆனால் உறுமத்தான் தெரிந்தது. வாயைத் திறந்ததும் வெற்றுச் சப்தங்கள்தாம் வெளிவந்தன. என்னைத் தடுத்து அமர்த்த முயன்றது. நான் ஓடித் தப்பித்தேன். நான் குடியிருந்த வீட்டு

முற்றத்தில் போய் இரவு முழுவதையும் அங்கேயே கழித்தேன். இரவு முழுவதும் நடந்து நடந்து காலும் கடுத்தது. நான் உயிரைக் கொடுத்த பிரேத பைசாசம் என்னை விரட்டிக்கொண்டு வந்துவிடுமோ என்று பயந்து பயந்து பொழுதைக் கழித்தேன்.

அதன் முகம் என் மனத்தில் உறையேற்றிய பீதி வார்த்தைக்குள் அடங்காது. எகிப்தியர் பதனிட்டுப் புதைக்கிறார்களே அந்தச் சரீரத்துக்கு உயிர் வந்தாலும் இவ்வளவு கோரமாகத் தோற்றாது. அந்தச் சடலத்தைக் கட்டி முடிக்குமுன்பு அதைப் பார்த்திருக்கிறேன். அப்பொழுதும் அது அழகற்றிருந்தது. ஆனால் அதற்குள் உயிர் ஓட ஆரம்பித்த பிற்பாடு அதன் கோரம் காணச் சகிக்கவில்லை.

மறுநாள் காலை, வாசல்காரன் கதவைத் திறந்ததும் வெளியே வந்தேன். கால்கொண்ட திசையில் சென்றேன். பயந்தான் என்னை உந்தித் தள்ளியது. எங்கு போகிறேன் என்ற பிரக்ஞையே இல்லாமல் நடந்துகொண்டே இருந்தேன்.

இப்படிச் சென்றுகொண்டே இருக்கும்போது எதிரே ஒரு வண்டி வந்தது. அதில் எனது தோழன் கிளெர்வெல் வந்தான். அவன் வருகை எனக்கு ஊர் ஞாபகத்தை உண்டு பண்ணியது. "பிராங்கன்ஸ்டீன், உன்னிடமிருந்து கடிதம் வராததினால் உன்னைப் பார்த்துவரும்படி உன் தந்தை என்னை அனுப்பி வைத்தார்; உடம்புக்கு என்ன, ஒரு மாதிரியாக இருக்கிறாயே?'' என்றான்.

என் மனசில் கிடந்த ரகசியங்களை நான் எப்படி அவனிடம் சொல்லுவது? நரம்பதிர்ச்சியின் ஆதிக்கம் தலை தூக்கியது. நோய் என்னைக் கிடத்திவிட்டது. பல மாதங்கள் வரை நான் பிரக்ஞையற்ற நிலையில் கிடந்தேன். எனக்குப் பணிவிடை செய்து ஆளாக்கி அப்புறம் எலிஸபெத் கொடுத்த கடிதத்தையும் கொடுத்து ஆறுதல் சொன்னான் கிளெர்வெல். நண்பன் என்றால் அவன்தான்.

# பழியும் பாவமும்

நாங்கள் இருவரும் ஊருக்குத் திரும்புவது என்று திட்டம் போட்டிருந்தோம். ஆனால் கிளெர்வெல், "இந்த ஊர்ச் சுற்று வட்டாரத்தை (இங்கோல்ஸ்டாட் பிரதேசத்தை) கால்நடையாகச் சுற்றிப் பார்த்துவிட்டுத் திரும்பலாமே?" என்றான். நானும் அவனுடைய ஆசைக்கு ஒத்துப்பாடி ஊர் சுற்றப் புறப்பட்டேன். யாத்திரை குதூகலமாகக் கழிந்தது. ஆனால் கோடை இடி மாதிரி எங்களுக்கு ஒரு கடிதம் காத்திருந்தது. என் தகப்பனார் எழுதியிருந்தார். விதியின் விபரீத விளையாட்டை என்னவென்று சொல்லுவது?

கடிதத்தின் சாரம் இதுதான்: "உன் அருமைத் தம்பி வில்லியம் இறந்துபோனான். சாவும் துர்மரணம். வியாழக்கிழமை (மே 17ம் தேதி) பிளெய்ன் பாலஸ் என்ற இடத்துக்கு என் தகப்பனார் எலிஸபெத்தையும் குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு உலாவப் போனாராம். மாலை நேரமும் காற்றும் சீராக இருந்ததினால் எதிர்பார்த்ததைவிட வெகுதூரம் சென்றுவிட்டார்கள். திரும்புமுன் நன்றாக இருட்டிவிட்டது.

முன்னால் ஓடிக்கொண்டிருந்த சிசுக்கள் வில்லியமும் எர்னஸ்டும் காணப்படவில்லை என்பது இருட்டின பிறகுதான் எங்களுக்குத் தெரிந்தது. நாங்கள் ஒரு பெஞ்சியில் உட்கார்ந்திருந்தோம். கடைசியில் எர்னஸ்ட் வந்தான். வில்லியத்தைப் பார்த்தீர்களா என்று கேட்டான். தன்னுடன் அவன் ஒளிந்து விளையாடிக்கொண்டிருந்ததாகவும், ஒளியச் சென்றவனைக் காணவில்லை என்றும் சொன்னான்.

நாங்கள் இருட்டில் வெகு நேரம் தேடினோம். அகப்படவில்லை. அவன் வீட்டுக்குத் திரும்பி இருக்கக்கூடுமென்று எலிஸபெத் சொன்னாள். வீட்டுக்கு வந்தோம். அங்கும் காணவில்லை. பிறகு தீவட்டி ஆள் துணையுடன் திரும்பி வந்து தேடினேன். பசும்புல் தரையில் அவனைப் பிணமாகக் கிடத்தி இருந்தது. அதிகாலை ஐந்து மணி சுமாருக்குக் கண்டேன். எலிஸபெத் ஆறாத்துயரில் ஆழ்ந்துவிட்டாள். உன்னால்தான் அவளைத் தேற்ற முடியும். உடனே புறப்பட்டு வா."

சேதியறிந்த நாங்கள் உடனே ஊருக்குப் பயணமானோம். வழிநெடுக மனசை சோகம் பிடுங்கித் தின்றது. ஆறு வருஷங்கள் வரை நான் காணாத என் நாட்டைக் கண்டேன். அந்த ஆறு வருஷங்களில் என்னென்ன

மாறுதல்கள். ஊரை அணுக அணுகச் சொல்லமுடியாத பீதி என்னை வாட்டி வருத்தியது. மறுபடியும் பழைய நோய்க்கு ஆளானேன். இரண்டு நாட்கள் லாவ்ஸென்னியில் தங்கினேன். சூழ்நிலையின் சாந்தமும் தெளிவும் எனக்குச் சிறிது நிம்மதியை ஏற்படுத்தின. கடைசியாக ஊருக்கு வந்து சேர்ந்தேன்.

ஊரை நெருங்கும்போது நன்றாக இருட்டிவிட்டது. எதிரில் நின்ற மலைகூடத் தெரியவில்லை. மனசில் மீண்டும் அந்தத் துன்பப் படலம் கவிந்தது. கட்புலனுக்குத் தென்பட்டது தீமையின் சூழ்நிலைதான். மனுஷ வர்க்கத்திலே துயரத்தில் அல்லாடுவதற்கு என்று பிறப்பிக்கப்பட்ட ஜீவன் நான் என்று அறிந்தேன்.

எதிர்பார்த்தபடி நடக்கத்தான் நடந்தது. ஆனால் நான் எதிர்பார்த்தது நடந்ததில் ஆயிரத்தில் ஒரு பங்குகூட இல்லை.

நான் ஜெனிவாவின் சுற்றுவட்டாரத்துக்குள் புகுந்தபோது கும்மிருட்டாகிவிட்டது. நகரத்தின் கோட்டைக் கதவுகளை அடைத்துவிட்டார்கள். நகருக்கு சுமார் மூன்றரை மைல் தூரத்தில் உள்ள ஒரு குக்கிராமத்தில் ராத்திரிப் பொழுதைக் கடத்திவிட வேண்டியதாயிற்று. வான மண்டலம் மாசுமறுவற்றுக் கிடந்தது. என் சகோதரன் வில்லியம் மடிந்த இடத்தைப் பார்க்க ஆசை எழுந்தது. நகர் வழியாகப் போக முடியாதாகையால், ஒரு படகை அமர்த்திக்கொண்டு ஏரி மார்க்கமாக பிளெய்ன் பாலஸுக்குப் போனேன். படகில் இருக்கும்போது, தூரத்தில் மாண்ட்பிளாங்க் சிகரத்தில் மின்னல் விளையாடுவதைக் கண்டேன். என்ன என்ன வடிவம் எல்லாம் எழுந்தன! புயல் வருவதை அறிந்து படகை விரைவாக ஓட்டிச்சென்று கரையில் இறங்கினேன். காற்றின் ஓட்டசாட்டத்தைக் காண ஒரு குன்றின் மீது ஏறிக்கொண்டேன். வானம் கறுத்தது. மழைத் துளிகள் பருக்கைக் கற்கள் மாதிரி விழுந்தன. அதன் உக்கிரம் நிமிஷத்திற்கு நிமிஷம் வலுத்தது. புயல் என்னைச் சூழ்ந்துகொண்டது. இடியும் மின்னலும் இருட்டைக் கிழித்துக் கூத்தாடின. ரௌத்திராகாரமாகக் கவிந்த புயலை பிரமிப்போடு நான் பார்த்துக்கொண்டு நின்றேன். மனம் வில்லியத்தை நினைத்து அழுதது.

திடீரென்று ஒரு மின்னல் வாள் வீச்சு. எனக்கு அருகில் இருந்த ஒரு மரத்து மறைவில் ஓர் உருவம் மறைந்தது. இன்னும் ஒரு மின்னல். ஒன்றிநின்றது யார் என்று பார்த்தேன். பிரம்மாண்டமான உருவம். நான் உயிர் பெய்து உண்டாக்கிய பிரேத மனிதன்! அவன் எப்படி இங்கு வந்தான்? க்ஷணத்தில் வில்லியத்தைக் கொலை செய்த கை யாருடையதென்பதைப் புரிந்துகொண்டேன். அடுத்த மின்வெட்டு, அவன்

செங்குத்தாக நின்ற பாறைக்குன்று ஒன்றில் தொத்தி ஏறி மறைவதைக் காட்டியது. மான்ட்ஸாலீவ் சிகரத்தில் அவன் மறைந்துவிட்டான்.

இந்தப் பிரேத மனிதனுக்கு நான் உயிர் கொடுத்து இரண்டு வருஷங்கள் கடந்துவிட்டன. இதுதான் இவனது முதல் கொலையா? இவனை இப்படியே மனித வம்சத்தின் மீது வேட்டையாடிக்கொண்டிருக்கும்படி விட்டுவிடுவதா?

மறுநாள் விடிந்ததும் ஊருக்குள் புகுந்தேன். வீட்டுக்குச் சென்றேன். என் சகோதரனைக் கொன்றது யார் என்பது தெரிந்துவிட்டது. நான் திடுக்கிட்டேன். என் ரகசியம் வெளியாகிவிடுமோ என்று நடுநடுங்கினேன்.

எங்கள் வீட்டில் ஜஸ்டின் என்ற குட்டி வளர்ந்து வந்தாள். நல்ல அமரிக்கையான பெண். கண்ணுக்கும் குளிர்ந்த ரூபம்.

அவள்தான் வில்லியத்தைக் கொன்றாளாம்!

இந்தக் குற்றச்சாட்டை எலிஸபெத் நம்பவில்லை. ஜஸ்டின் நிரபராதி என்று விடுதலை செய்துவிடுவார்கள் என நிச்சயமாக நம்புவதாகச் சொன்னாள்.

“அவள் குற்றவாளி அல்லவென்றால் அது நிரூபிக்கப்படும். பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. நீ நெஞ்சைத் தளர விடாதே” என்றேன் நான்.

“எலிஸபெத் ஏன் வீணாய் அழுகிறாய்? கண்ணீரைத் துடைத்துக்கொள். நீ நம்புவது போல அவள் நிரபராதி என்றால், நம்முடைய சட்டதிட்டங்கள் நீதியை நிலைநாட்டும் என நம்பு; அதில் பாரபட்சமோ நியாயத் தவறுதலோ ஏற்படாமல் நான் பார்த்துக்கொள்ளுகிறேன்” என்றார் என் தகப்பனார்.

# விசாரணை

பதினொரு மணி வரை மனவேதனையுடன் கழித்தோம். விசாரணை ஆரம்பமாயிற்று. எனது தந்தையும் உறவினர்களும் சாட்சிகளாகக் கோர்ட்டுக்குச் சென்றார்கள். எனக்கோ நீதி பரிபாலனம் என்பது சொல்லுக்கடங்காத கேலிக்கூத்தாகத் தென்பட்டது. நெய்க் கொப்பறையில் போட்டுத் தகிப்பது போல எனது மனம் துடிதுடித்தது. நான் மனித வர்க்கம் அறியலாகாது என மறைத்து வைக்கப்பட்டுள்ள ரகசியத்தைத் தெரிந்துகொள்ள ஆசைப்பட்டதன் விளைவாக – சட்டத்துக்குப் புறம்பான முறைகளின் பலனாக – இரண்டு பேர் உயிருக்கு உலை வைத்தேன். ஒன்று பச்சிளம் பசலை; துன்பம் என்பதே இன்னதென்றறியாத சிசு. அடுத்தது மரணமோ எனின் பச்சைக் கொலை; மனசில் பச்சை குத்தியது போல பதிந்துவரும்படியாகச் சகல துணைக் கரணங்களுடனும் செய்யப்படும் கொலை. ஜஸ்டின் யோக்கியமான பெண். அவள் வாழ்வு இன்பமயமாக இருக்க வேண்டுவது அவசியம். ஆனால் இப்போது மகா கேவலத்துக்குள்ளாக்கப்பட்டுச் சவக்குழிக்கருகில் கொண்டுவந்து நிறுத்தப்பட்டிருக்கிறாள். ஜஸ்டின் மீது சுமத்தப்பட்ட குற்றங்களுக்கு நானே பொறுப்பாளி என்று ஆயிரம் தடவை வேண்டுமானாலும் ஒப்புக்கொண்டிருப்பேன். ஆனால் அதை யார் நம்புவார்கள். பயித்தியம் பிடித்துப் பிதற்றுகிறான் என்றுதான் சொல்லுவார்களே தவிர அவளை விடுதலை செய்யமாட்டார்கள்.

கோர்ட்டில் ஜஸ்டின் முகத்தில் அமைதி குடிகொண்டிருந்தது. அந்த அமைதியிலே ஒரு அழகும் தேங்கி நின்றது. தான் நிரபராதி என்ற நிச்சயம் அவளது முகத்தில் பிரதிபலித்தது. ஜனங்கள் அவளை வைது, திட்டிக்கொண்டு நின்றார்கள். இருந்தாலும் அவள் நடுநடுங்கவில்லை. சாதாரணக் குற்றமாக இருந்திருந்தால் ஜனங்களின் மனசு இளகி இருக்கக்கூடும். பச்சிளங் குழந்தையைக் கொன்ற கொலைகாரி என்ற நினைப்பில் ஜனங்கள் அவள் மீது ஆக்ரோஷம் கொண்டிருக்கிறார்கள். மனவுறுதியின் பேரில்தான் அவளுடைய முகத்தில் அந்த அமைதி ஏற்பட்டிருக்க வேண்டும். மனக்குழப்பங் காட்டினால் குற்றவாளி என நினைத்துவிடுவார்களோ என பயந்து தைரியசாலி போல பாவனை செய்தாள். கோர்ட்டுக்குள் நுழைந்தவுடன் சுற்றுமுற்றும் பார்த்து நாங்கள் அமர்ந்திருந்த இடத்தை நோக்கினாள். எங்களைக் கண்டதும் அவளது கண்கள் கலங்கின. ஆனால் சற்று நேரத்துக்குள் சமாளித்துக்கொண்டாள்.

விசாரணை ஆரம்பமாயிற்று. குற்றச்சாட்டு விஸ்தரிக்கப்பட்ட பிற்பாடு சில சாட்சிகள் விசாரிக்கப்பட்டனர். சில விபரீதமான சந்தர்ப்பங்கள் அவளுக்கு விரோதமாக அணிவகுத்து நின்றன. கொலை நடந்த அன்று இரவு முழுவதும் வெளியே சென்றிருந்தாள். அதிகாலையில், சந்தைக்குச் செல்லும் ஒருத்தி அவளைப் பிரேதம் கிடந்த இடத்துக்கு அருகாமையில் கண்டிருக்கிறாள். நீ இங்கே என்ன செய்கிறாய் என்று கேட்டதற்கு அவள் சரியான பதில் சொல்லவில்லை என்று கூடைக்காரி சொன்னாள். வீட்டுக்குக் காலை எட்டு மணிக்குத் திரும்பியபோது எங்கே போயிருந்தாய் என்று கேட்டதற்கு 'குழந்தையைத் தேடிக்கொண்டிருந்தேன். தகவல் எதுவும் தெரியுமா' என்று அவசரமாகக் கேட்டாளாம். சவத்தைக் கண்டவுடன் ஜன்னி கண்டது மாதிரி பிதற்றிக்கொண்டு விழுந்து அதே காரணமாக நாலைந்து நாட்கள் படுத்தபடுக்கையாகிவிட்டாள். அவளது உடையிலிருந்ததாகக் குழந்தைக்குப் போட்டிருந்த கழுத்துச் சங்கிலியை வேலைக்காரன் ஒருவன் கண்டெடுத்தான். குழந்தை காணாமற் போகுமுன் அதன் கழுத்தில் கிடந்தது இந்தச் சங்கிலிதான் என்று எலிஸபெத் கோர்ட்டில் ஒப்புக்கொண்டாள். கூடியிருந்த ஜனங்கள் ஆத்திர மிகுதியால் ஆரவாரித்தார்கள்.

தனது நிரபராதத் தன்மையை நிரூபிக்கும்படி ஜஸ்டினைக் கோர்ட் கேட்டது. விசாரணை மேலும்மேலும் நடக்க அவள் முகம் மாறிக்கொண்டு வந்தது. பிரமிப்பு, பீதி, துன்பம் இவை அவள் முகத்தில் மாறிமாறித் தோன்றிக்கொண்டிருந்தன. சில சமயங்களில் கண்ணீரோடு பேசினாள். அடிக்கடி குரல் கம்மியது.

‘‘நான் நிரபராதி. இதற்குத் தெய்வமே சாட்சி. ஆனால் என் பேச்சு எனக்கு விடுதலை தந்துவிடும் என்று நான் நம்பவில்லை. எனக்கு விரோதமாக எடுத்துக்காட்டப்படும் காரியங்களை நடந்தது நடந்தமாதிரி எடுத்து விவரிக்கிறேன். சந்தர்ப்பங்கள் இரட்டைப்பொருள் படும்படி சந்தேகாஸ்பதமாக இருந்தால் நீதிபதிகள் எனக்கு இரக்கம் காட்டுவார்கள் என நான் நம்புகிறேன்" என்றாள்.

கொலை நடந்த இரவில் இவள் ஜெனிவாவுக்கு ஏழு மைல் தூரத்தில் உள்ள ஒரு கிராமத்தில் உள்ள தனது சித்தி வீட்டில் இருந்தாள். அங்கே செல்லுவதற்கு எலிஸபெத்தின் அனுமதி வாங்கிக்கொண்டே சென்றாள். இராத்திரி சுமார் ஒன்பது மணிக்கு அவள் திரும்பி வந்துகொண்டிருக்கையில், வழியில் ஒருவள் இவளைப் பார்த்து, 'ஒரு குழந்தையைக் காணவில்லை, நீ கண்டதுண்டா?' என்று கேட்டாள். உடனே அவள் ஜெனிவா நகர் மதில் கதவருகில் குழந்தையைத்

தேடிக்கொண்டு பல மணிநேரம் கழித்தாள். இவள் தேடித் திரிந்துகொண்டிருக்கும்போது அகாலமாகிவிட்டதால் ஊர்க் கோட்டைக் கதவை அடைத்துவிட்டார்கள். வேறு வழியில்லாமல் வெளியே பல மணிநேரங்கள் தங்கவேண்டியதாயிற்று. வாசலுக்கு அருகில் உள்ள குடிசையில் வசிப்பவர்களை இவளுக்குத் தெரியும். அங்கே போக அவர்களும் தூங்குவதையறிந்து எழுப்ப வேண்டாம் என்று நினைத்து, தொழுவத்தில் வைக்கோல் மீது படுத்துக்கொண்டாள். தூங்கிச் சில வினாடிகள்கூடக் கழியவில்லை. ஏதோ காலடிச் சத்தம் கேட்டு விழித்துக்கொண்டாள். பொழுதும் விடிந்துவிட வெளியே சென்று குழந்தையைத் தேட ஆரம்பித்தாள். சவம் கிடந்த இடத்தருகில் சென்றிருந்தால் தெரியாமல்தான் அந்த இடத்தை நெருங்கி இருக்க வேண்டும். இரவு முழுவதும் தூங்காமல் திரிந்துகொண்டிருந்ததினால்தான் சந்தைக்குப் போன கூடைக்காரிக்குச் சரியான பதில் சொல்ல முடியவில்லை. ஆனால் சங்கிலி தனது மடியில் வந்த விதந்தான் புரியவில்லை என்றாள்.

“இது எனக்கு எவ்வளவு தூரம் விரோதமாக இருக்கிறது என்பதை நானறிவேன். ஆனால் அதைப் பற்றித் தக்க மாதிரி விளக்க எனக்கே எதுவும் புலப்படவில்லை. ஒரு வேளை வேறு யாராவது அதை என் பையில் வைத்திருக்கலாமோ என்ற சந்தேகந்தான் எனக்குத் தோன்றுகிறதே ஒழிய நிச்சயமாக எதுவும் சொல்லுவதற்கில்லை. இதிலும் இம்மாதிரி துணிந்து சொல்லுவதற்குப் போதுமான அத்தாட்சி கிடையாது. எனக்கு விரோதி என்று சொல்லக்கூடியவர்கள் யாருமே கிடையாது. கொலைகாரன் அதை அங்கே வைத்தானா – அதற்குச் சந்தர்ப்பம் இருந்ததாகவும் எனக்கு ஞாபகம் இல்லை. அவன் நகையைத் திருடிவிட்டி, அதை ஏன் போட்டுவிட வேண்டும்?

என் கட்சியைச் சோதித்து நீதி பாலிப்பது நீதிபதிகளின் பொறுப்பு. எனது குணத்தைப் பற்றிச் சில சாட்சிகளை விசாரிக்கும்படி நீதிபதிகளைக் கேட்டுக்கொள்ளுகிறேன். அவர்களது சாட்சியும் என் மீது சுமந்துள்ள குற்றத்துக்கு ஆதாரமாக நின்றுவிட்டால் நான் தண்டனையை அனுபவித்துத்தான் தீரவேண்டும்.”

பல வருஷங்கள் அவளுடன் பழகிவந்த சாட்சிகள் பலர் விசாரிக்கப்பட்டனர். யாவரும் ஒருமித்து அவள் நல்லவள் என்றே சொன்னார்கள். ஆனால் அவள் செய்திருப்பதாகச் சுமத்தப்பட்டுள்ள குற்றம் அவர்களைக் கோழையாக்கியது. முன்வந்து சொல்லத் தயங்கினார்கள். இதுவும் தோற்றுவிடும் என்ற நிலை வந்ததைக் கண்டவுடன் எலிஸபெத்

எழுந்து சில வார்த்தைகள் சொல்ல அனுமதி தரவேண்டும் என்று கோர்ட்டிடம் கேட்டாள்.

"நான் இறந்துபோன சிசுவுக்கு சகோதரி என்றாலும் பொருந்தும். நான் இந்தக் குடும்பத்தில் அவ்வளவு அன்னியோன்னியமாக வளர்ந்து வருகிறேன். ஆகையால்தான் நான் சாட்சி சொல்ல முன்வந்திருக்கிறேன். இத்தனை நாள் நேசம் போல் காட்டி வேஷம் போட்டுவந்த போலி நண்பர்களின் சாட்சியத்தின் விளைவாக ஒருத்தி துர்மரணம் அடையப் போகிறாள். இந்தச் சமயத்தில் அவளுடைய குணம் எனக்கு நன்றாகத் தெரியும் என்பதைச் சொல்ல முன்வந்திருக்கிறேன். குற்றவாளியை எனக்கு நன்றாகப் பழக்கம் உண்டு. மனித வர்க்கத்திலேயே மிகவும் சிறந்த குணம் படைத்தவள் என்று நான் சொல்லுவேன். என்னுடைய அத்தையான மேடம் பிராங்கன்ஸ்டீன் நோயுற்றிருந்தபோது இவள் செய்த பணிவிடையை யாரும் மறுக்க முடியாது. அதன் பிறகு குற்றவாளியாக நிறுத்தப்பட்டுள்ள இந்தப் பெண்ணின் தாயாரும் நோயுற்று நெடுநாட்கள் படுத்த படுக்கையாகக் கிடந்தாள். அப்பொழுது அவள் செய்த சிச்ருஷையை எல்லாரும் பிரமாதமாகப் பேசினார்கள். அதன் பிறகு இந்தப் பெண் என்னுடைய மாமாவின் வீட்டுக்கு வந்து எங்களில் ஒருத்தியாக வசித்துவந்தாள். இறந்துபோன சிசுவிடம் இவளுக்கு எல்லை கடந்த அன்பு. சொந்தத் தாயார் மாதிரி அக்குழந்தையை வளர்த்துவந்தாள். அவளுக்கு விரோதமாக நிறுத்தப்பட்டுள்ள சாட்சிகள் எதுவாகயிருந்தபோதிலும் சரி, அவளை இன்றும் நான் நிரபராதி என்றுதான் நம்புகிறேன். இவள் அந்த மாதிரி குழந்தையைக் கொலை செய்வதற்குக் காரணமே கிடையாது. அவளுக்கு விரோதமாக நிற்கும் அந்த அற்ப நகையை அவள் என்னிடம் கேட்டிருந்தால் நானே கொடுத்துவிட்டிருப்பேன். அவ்வளவு தூரம் எனக்கு அவள் மீது மதிப்பு.''

எலிஸபெத்தின் வேண்டுகோளையும் அத்தாட்சியையும் கோர்ட்டில் கூடியிருந்த அத்தனை பேரும் பாராட்டினர். தலையசைத்து அடித்தொண்டையில் ஆமோதித்தார்கள். ஆனால் ஜஸ்டின் அவ்வளவு நன்றி கெட்ட ஜந்து என்றுதான் ஜனங்கள் நினைக்க ஆரம்பித்துவிட்டார்கள். எலிஸபெத் பேசும்போது அவளே அழுதுவிட்டாள். விசாரணையின்போது என் வேதனை சொல்லி மாளாது. ஜஸ்டின் குற்றவாளி அல்ல என்று பரிபூரணமாக நம்பினேன். அது எனக்கு நிச்சயம். குழந்தையைக் கொன்ற சிசுவே இவள் பேரிலும் பழியைப் போட்டு இந்த விகாரமானதொரு விளையாட்டில் இறந்துவிட்டதோ? நிலைமையின் பயங்கரத்தன்மையைக் கண்டு என்னால் சகிக்க முடியவில்லை. ஜனங்களின் மனோபாவமும் நீதிபதிகளின் முகமும் அவளைக்

குற்றவாளியாகக் கண்டித்துவிட்டன. வேதனை தாங்காமல் வெளியே ஓடினேன். குற்றவாளி பட்ட அவஸ்தை நான் பட்டதில் ஆயிரத்தில் ஒன்றிருக்காது. தான் நிரபராதி என்ற நினைப்பு அவளுக்குத் தெம்பு கொடுத்தது. ஆனால் வேதனை என்ற ஓநாயின் கோரப்பற்கள் என் இருதயத்தைக் கவ்விக்கொண்டன. அதன் பற்களிலிருந்து தப்ப முடியவில்லை.

இரவு முழுவதும் ஒரே துன்பம். காலையில் கோர்ட்டுக்குச் சென்றேன். எனது நாவும் நெஞ்சும் வறண்டுவிட்டன. என்ன தீர்ப்பு என்று கேட்கக்கூட நாவெழவில்லை. ஆனால் கோர்ட் அதிகாரி என் நோக்கத்தைப் புரிந்துகொண்டு ஜஸ்டின் குற்றவாளிதான் என்று தீர்ப்புக் கூறப்பட்டுவிட்டது என்பதை அறிவித்தார். என் துயரத்தையும் வேதனையையும் எடுத்துச் சொல்ல நாக்கு செத்துவிட்டது என்றே சொல்ல வேண்டும்.

"இவ்வளவு தெளிவான வழக்குக்கு சாட்சியமே தேவையில்லை. ஆனால் எவ்வளவுதான் நிர்த்தாரணம் செய்வதற்குத் தகுந்த சான்றாக இருந்தாலும் சந்தர்ப்ப சாட்சியங்களைக் கொண்டு நீதிபதிகள் கொலை தீர்ப்பு அளிக்க விரும்பவில்லை'' என்றார்.

இதை நான் எதிர்பார்க்கவில்லை. கண்களே என்னை ஏமாற்றுகின்றனவா, எனது சந்தேகங்களைச் சொன்னால் என்னைப் பைத்தியக்காரன் என்று நினைக்கக்கூடிய உலகம் போல எனக்கும் பைத்தியம் பிறந்துவிட்டதா? நான் வேகமாக வீட்டுக்குத் திரும்பினேன். எலிஸபெத் ஆவலுடன் என்ன நேர்ந்தது என்று கேட்டாள்.

‘‘நீ எதிர்பார்த்தபடிதான் நடந்தது. குற்றவாளி ஒருவன் தப்புவதற்குப் பதிலாக, பத்து நிரபராதிகள் தண்டிக்கப்பட்டாலும் குற்றமில்லை என்று நீதிபதிகள் கருதுகிறார்கள். ஆனால் அவள் தனது குற்றத்தை ஒப்புக்கொண்டுவிட்டாளாம்'' என்று சொன்னேன்.

ஜஸ்டின் நிரபராதி என்று தீர்க்கமாக நம்பிய எலிஸபெத்துக்கு இந்தச் செய்தி திடுக்கிடும்படியாக இருந்தது.

"மனிதர்களுடைய நற்குணத்தில் நான் இனிமேல் எப்படி நம்பிக்கை வைப்பது? ஜஸ்டினை என் சொந்தத் தங்கை போல பாவித்தேன். துரோகம் செய்வதற்காக அவள் கபடச் சிரிப்புச் சிரித்துவந்தாளா? அவளுடைய பற்களைப் பார்த்தால் இந்த மாதிரிக் குற்றம் செய்வாள் என்று யார் சொல்ல முடியும்? இருந்தாலும் அவள் கொலையல்லவா செய்துவிட்டாள்?'' என்று அவள் பரிதபித்தாள்.

சிறிது நேரம் கழித்து, ஜஸ்டின் என்னுடைய மைத்துனியைக் காண ஆசைப்படுகிறாள் என்று தகவல் வந்தது. என் தகப்பனார், “நீ போகாமல் இருப்பது நல்லது; பிறகு உன் இஷ்டம்” என்று சொல்லிவிட்டார். “அவள் குற்றவாளியானாலும் நானே சென்று பார்க்கிறேன்; ஆனால் தனியாகப் போக முடியாது” என்று என்னையும் உடன் அழைத்துச் சென்றாள் எலிஸபெத்.

நாங்கள் இருவரும் சிறைச்சாலைக்குப் போனோம். ஜஸ்டின் வைக்கோல் விரிப்பில் உட்கார்ந்துகொண்டிருந்தாள். கையில் விலங்கிடப்பட்டிருந்தது. தலையை முழங்காலில் சாய வைத்து உட்கார்ந்துகொண்டிருந்தாள். எங்களைக் கண்டதும் எழுந்தாள். எலிஸபெத்தின் காலடியில் விழுந்து தேம்பினாள்.

"நீ நிரபராதி என்று நம்பினேனே! அந்த நிம்மதியையும் ஏன் போக்கிவிட்டாய்? அப்பொழுது துயரமாகத்தான் இருந்தது. இப்பொழுது எல்லை காணாத் துன்பமாக இருக்கிறது” என்று எலிஸபெத்தும் கண்ணீர் வடித்தாள்.

“நீங்களுமா என்னைப் பாதகி என்று நினைத்துவிட்டீர்கள்? நீங்களுமாக இந்தச் சதிகார உலகத்துடன் சேர்ந்துகொண்டுவிட்டீர்கள்?” என்று கதறினாள் ஜஸ்டின்.

“எழுந்திரு குழந்தாய். நிரபராதி என்றால் ஏன் மன்னிப்புக் கேட்பது மாதிரி கீழே விழுந்து வணங்குகிறாய்? நான் உனது எதிரியல்ல. என்ன சாட்சி இருந்தாலும் நீ நிரபராதி என்றுதான் நான் நம்பி இருந்தேன். நீயே குற்றத்தை ஒப்புக்கொண்டுவிட்டாயாமே? அந்தச் செய்தி பொய் என்று சொல்லு. உன்மீதுள்ள நம்பிக்கை எனக்கு மாறாது. நீ குற்றத்தை ஒப்புக்கொண்டிருப்பதுதானே என்னை வேதனைப்படுத்துகிறது.”

“நான் ஒப்புக்கொண்டேன்; ஆனால் பொய் சொன்னேன். சாகும்பொழுது ஈமக்கிரியையில் பாவமன்னிப்புக் கிடைப்பதற்காகப் பொய் சொன்னேன். மற்ற எல்லாக் குற்றங்களையும்விட இந்தப் பொய் என் நெஞ்சை அறுக்கிறது. கடவுள்தான் என்னை மன்னிக்க வேண்டும். தீர்ப்புக் கூறின நிமிஷம் முதல் பாதிரியார் என்னை வந்து நான் குற்றத்தை ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும் என்று நிர்ப்பந்தம் செய்தார், பயமுறுத்தினார், மிரட்டினார். அவருடைய பேச்சைக் கேட்ட பிற்பாடு நானே என்னை ஒரு கோர ராட்சஸியாக எண்ணினேன். நான் பிடிவாதம் செய்தால் மதப்பிரஷ்டம் செய்து நரகத்துக்கு அனுப்பிவிடுவேன் என்று பயமுறுத்தினார். எனக்கு இந்தச் சிறைச்சாலையில் யார் துணை இருக்கிறார்கள்? நான்

இனிமேல் நித்திய நரகத்தில் கிடந்து எரிந்து புழுங்குவதுதான் என் கதி என்று மலைத்தேன், திகைத்தேன். பயத்தில் மனம் மருண்டு நான் செய்யாத குற்றத்தைச் செய்ததாக ஒப்புக்கொண்டேன். இப்பொழுது என் வேதனை சொல்லி முடியாது'' என்று அழுதாள் ஜஸ்டின்.

சற்று விம்மல்கள் நின்றவுடன் அவள் மேலும் பேச ஆரம்பித்தாள்.

"உங்களுடைய ஜஸ்டின் இந்தக் குற்றத்தைச் செய்திருப்பாள் என்று நீங்கள் நம்பிவிட்டீர்களோ என்றுதான் பிரமித்துப் போனேன். மோட்ச லோகத்தில் நாம் சந்திப்போம். அங்கே மகிழ்ச்சியுண்டு. மரணத்தில் கேவலமும் அவமானமும் லபித்தால் அது என் விதி'' என்றாள்.

''ஜஸ்டின் என்னை மன்னிப்பாய், நான் ஒரு நிமிஷம்கூட உன்னைச் சந்தேகிக்கவில்லை. நீ ஏன் ஒப்புக்கொண்டாய்? நீ கவலைப்படாதே, உன்னுடைய நிரபராதத்தன்மையை உலகுக்குப் பறைசாற்றி உன்னை நான் மீட்கிறேன். நீ எனக்குத் தங்கையாக விளையாட்டுத் தோழியாக இருந்து வருவாய். நீயா தூக்குமரத்தில் சாவது? இதைப் பார்த்துச் சகித்து நான் எப்படி உயிர்வாழ முடியும்?'' என்றாள் எலிஸபெத்.

ஜஸ்டின் துயரத்துடன் தலையசைத்தாள்.

''நான் சாவதற்குப் பயப்படவில்லை. அதில் பயம் போய்விட்டது. இனி ஏற்படும் துன்பத்தையும் சகித்துக்கொள்ள தெய்வம் எனக்குப் போதுமான பலம் கொடுக்க வேண்டும். கசப்பும் துயரமும் மிகுந்த உலகை விட்டுப் போகிறேன் என்ற ஞாபகம் தங்களுக்கு இருக்குமாகில் அநீதியாக மாண்ட ஒருத்தியைப் பற்றி நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். தெய்வ ஆணையைச் சகிப்பதற்குப் பொறுமை வேண்டும் என்பதை என்னிடமிருந்து கற்றுக்கொள்ளுங்கள்'' என்றாள்.

இவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது நான் ஒரு மூலையில் போய் ஒதுங்கி நின்றேன். என் மனம் பட்ட உளைச்சல் சொல்லி முடியாது. நிர்க்கதி என்ற சோகமா? அதைப் பற்றிப் பேச யாருக்குத் தைரியம்? நாளைய தினம் குற்றம் சாட்டப்பட்டுச் சிறையில் கிடப்பவள் மரணம் என்ற எல்லைக் கோட்டைத் தாண்டிச் சென்றுவிடுவாள். வாஸ்தவத்தில் எனக்கல்லவா அந்தத் தண்டனை கிடைக்க வேண்டும்? பற்களை நெறநெறவென்று கடித்தேன். என் மனம் அழுதது. ஜஸ்டின் என்னைக் கண்டாள். என்னிடம் வந்து, ''தாங்கள் வந்ததற்கு என் நன்றி. நான் குற்றவாளியல்லவென்று தாங்கள் நினைப்பதாக நம்புகிறேன்'' என்றாள்.

என்னால் பதில் சொல்ல முடியவில்லை. "ஜஸ்டின் நீ நிரபராதி என

அவரும் நிச்சயமாக நம்புகிறார். நீ ஒப்புக்கொண்டதாகத் தகவல் வந்தபோதுகூட அதை நம்ப மறுத்துவிட்டார்'' என்றாள் எலிஸபெத்.

"அதற்காக என் நன்றி. கடைசி நிமிஷத்தில் வாஸ்தவமான அன்புதான் ஆறுதல் அளிக்கிறது. இது என் குற்றத்தில் பாதியைப் போக்கிவிட்டது. இனிமேல் நான் நிம்மதியாக மாண்டுபோவேன். நீங்கள் இருவரும் நான் நிரபராதி என்று நம்பினால் அதுவே எனக்குப் போதும்'' என்றாள் ஜஸ்டின்.

அவள் அவர்களுக்கு ஆறுதல் அளிக்கப் புகுந்துவிட்டாள். அவள் மனம் ஆறிவிட்டது. நித்தியமான நரகம் ஒன்று என் நெஞ்சைத் தின்று கொண்டு இருக்கும்போது உண்மைக் கொலைகாரனான எனக்கு நிம்மதி ஏது, ஆறுதல் ஏது?

எலிஸபெத் அழுதாள், துயருற்றாள். ஆனால் அவளது சோகத்தில் களங்கம் கிடையாது. சந்திரனை மறைக்கும் மேகம் அதன் பிரகாசத்தை மறைக்கலாம்; அழித்துவிட முடியுமா? வேதனையும் துன்பமும் என் இதயத்தைத் தின்றன. எனக்குள்ளே ஒரு நரகம் குடிகொண்டது. பல மணிநேரம் நாங்கள் ஜஸ்டினுடன் இருந்தோம். எலிஸபெத் வரமாட்டாமல் திரும்பி வந்தாள். ''நானும் உன்னுடன் மாண்டுபோனால் தேவலை'' என்று அவளிடம் சொல்லியழுதாள்.

ஜஸ்டின் தனது துயரத்தை மறைத்துக்கொண்டு முகத்தில் மலர்ச்சி காட்டினாள். எலிஸபெத்தை மார்புடன் அணைத்துத் தழுவி வழியனுப்பினாள். ''இன்பத்துடன் வாழ்ந்து மற்றவர்களுக்கும் இன்பம் விளைவிக்க வேண்டும்'' என்று சொல்லி விடை கொடுத்தாள்.

மறுநாள் ஜஸ்டின் மாண்டுபோனாள். எலிஸபெத்தின் உருக்கமான வேண்டுகோள்கள் நீதிபதிகளின் மனதை உருக்கவில்லை. நானும் எவ்வளவோ மன்றாடிப் பார்த்தேன். பயன்படவில்லை. அவர்களுடைய பதில்களின் நீதியைக் கண்டு என் வாயடைத்துப்போயிற்று.

என் மனம் தன்னையே சித்திரவதை புரிந்துகொண்டது. எலிஸபெத் தனது துயரத்தை வெளியில் காட்டாமல் வாடினாள். அதற்கும் காரணம் நான்தானே. என் தந்தையின் துயரம், வெறியோடிக் கிடக்கும் வீடு இதற்கு எல்லாம் நான்தானே காரணகர்த்தன். 'துயருற்றவர்களே அழுங்கள். இது உங்கள் கடைசித் துயரம் அல்ல. உங்கள் துயரப் பேரிரைச்சல் மறுபடியும் மறுபடியும் கேட்கும். தந்தையே நான் உம்மை உத்திரவிடுகிறேன். உம் கண்ணீர் வடியாது. நீர் பெற்றெடுத்த மகன், உம்முடைய சத்புத்ரன் உத்திரவிடுகிறான். நீர் அழுதுதான் வாழ்வைக் கழிக்க வேண்டும்.

